REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: [illegible]

# நம் நாடு

தி. மு. க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily ★ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை: மார்கழி 7உ. வியாழன் (22- 12 55) ★ ★ வெளியூர்: மார்கழி 8உ. வெள்ளி (23—12—55) [இதழ் 163

### புத்திசாலித்தனமான செயல்போலும்!

ஒரு நாளைக்கு 38 முறை விதம் 380 முறைகள் இரயில் நிறுத்தம்!

வடநாட்டில் கிழக்குப் பகுதி இரயில்வேக்களில் பிரயாணம் செய்வோர், கடந்த நவம்பர் திங்களின் இறுதிப் பத்து நாட்களில், தினம் 38 தடவை விதம் 380 முறைகள், ஓடிக்கொண்டிருக்கும் இரயில்களை எவ்விதக் காரணமும் இன்றி சங்கிலியைப் பிடித்து இழுத்து நிறுத்தியதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது.

# காங்கிரசின் நிர்வாக 'இலட்சணம்'

★

## நிகழ்ச்சி

சென்னை சிம்சன் கம்பெனித் தொழிலாளர்கள், சர்க்கார் பஸ் தொழிலாளர்கள் சார்பில் தி மு கழக மாநில மாநாட்டிற்காக நிதியளிப்புக் கூட்டம் சிந்தாதிரிப்பேட்டை நேப்பியர் பூங்கா மைதானத்தில் 21—12—55 மாலை 6½ மணியளவில் துவங்கிற்று.

கூட்டத்திற்கு ஏராளமான தொழிலாளர்களும், பல்லாயிரக்கணக்கான பொதுமக்களும் திரண்டிருந்தனர்.

கூட்டத்திற்கு 30-வது வட்ட தி மு. கழகச் செயலாளர் தோழர் மதிவண்ணன் தலைமை தாங்கி கூட்டத்தின் நோக்கத்தை விளக்கினர்.

முதலில், சர்க்கார் பஸ் தொழிலாளர்கள் சார்பில் தோழர் ஆனந்தன், தொழிலாளர்கள் தி மு. கழகத்திடம் பற்றும் பாசமும் கொண்டிருப்பதற்கான காரணத்தை விளக்கியதும், தோழர் இளவழகனர், சர்க்கார் பஸ் போக்குவரத்து தொழிலாளர் சார்பில் ரூ. 101 தோழர் மு கருணாநிதியிடம் நிதியளிப்பு தந்தார்.

சிம்சன் கம்பெனி தொழிலாளர்கள் சார்பில், ரூ 200 நிதியளிப்பு தந்த தோழர் கரிகாலன், தொழிலாளர்கள் இன்று பெருவாரியான அளவில், தங்களின் விடுதலைக்கும்—விமோசனத்திற்கும் தி. மு. கழகத்தை எதிர்பார்ப்பதாயும், தி.மு கழகம் அந்தத் தொழிலாளர்களின் ஆர்வத்திற்கு மதிப்பளிக்கத் தவருது எனத் தான் நம்புவதாயும் குறிப்பிட்டார்.

பின்னர் 'ஹார்பர் பின்னி எஞ்சினீயரிங்' தொழிலாளர் சார்பில் ரூ 15—7—3-ம், அடிசன் மோட்டார் கம்பெனி தொழிலாளர் சார்பில் ரூ. 10-ம், மாநில மாநாட்டிற்காகத் தரப்பட்டது.

அடுத்து தோழர் மூவை ஆர். எஸ். பாண்டியன் சிறிது நேரம் பேசினர்.

பின்னர் சென்னை மாவட்ட தி. மு கழகச் செயலாளர் தோழர் இளம்பரிதி பேசுகையில், தொழிலாளர் இயக்கத்தில் தி. மு கழகத்தின் ஈடுபாடு குறித்தும், இப்போது ஏற்பட்ட புயல் வெள்ளங்களினுல் பாதிக்கப்பட்ட மக்களுக்கு தி. மு கழகம் தேடித் தந்துவரும் நிவாரணம் குறித்தும் விளக்கம் தந்து உரையாற்றினர்.

பின்னர் 29-வது வட்ட நகர சபை உறுப்பினரும், தி. மு கழகச் செயலாளருமான தோழர் அ. பொ. அரசு, புயல் வெள்ள நிவாரண நிதிக்காக அந்த வட்டத்தில் வசூலான இருநூறு ரூபாயையும் தோழர் இளம்பரிதியிடம் அளித்தார்.

பின்னர் தோழர் மு. கருணாநிதி சொற்பொழிவாற்றினர்.

இறுதியில் ஒரு தோழரின் பெண் குழந்தைக்குத் 'தேன்மொழி'யென அவர் பெயர் சூட்டினர்.

தலைவர் முடிவுரைக்குப் பின், நன்றி நவிலலுடன் கூட்டம் இனிது முடிவுற்றது.

## 'மூன்று ஆண்டுகளுக்குமுன் நாம் தந்த துணி இன்னும் அவதிப்பட்டோருக்குத் தரப்படவில்லை'

### சென்னைக் கூட்டத்தில் மு. கருணாநிதி தூடு

"வீதி வீதியாக அலைந்து, காலணு — அரையணுக்கள் வசூலித்தோம்; முகத்திலே பவுடர் பூசிக்கொண்டு இரவெல்லாம் கூத்தாடினேம்; இப்படி ஏழை—எளிய மக்களிடமிருந்து அவர்களது வியர்வைத் துளிகளில் சிலவற்றைப் பெற்று முப்பதாயிரம் ரூபாய் சேகரித்தோம்; கைத்தறியாளருக்கும் வாழ்வு கிடைக்கவேண்டும் என்பதற்காக, அந்த 30 ஆயிரம் ரூபாய்க்கும் கைத்தறி ஆடைகளை வாங்கினேம்—சென்ற முறை—மூன்ருண்டுகளுக்குமுன், தஞ்சைத் தரணியும், திருச்சி மாவட்டமும் புயற் கொடுமைக்கு ஆளானபோது!

"அவதிப்பட்ட மக்களுக்கு—அல்லலுறும் மக்களுக்கு—தேம்பியழும் மக்களுக்கு உதவவேண்டும் என்பதற்காக—நிவாரணம் தருவதற்காக, முப்பதாயிரம் ரூபாய் திரட்டி, கைத்தறி ஆடைகளை வாங்கி, இந்த சர்க்காரிடம்—மாநில சர்க்காரிடம் ஒப்படைத்தோம்—மூன்ருண்டுகளுக்கு முன்னல்!

"நாம் அத்தனை கஷ்டப்பட்டு சேகரித்துத் தந்த துணிகளை இந்தச் சர்க்கார், பாதிக்கப்பட்ட மக்களுக்கு விநியோகிக்கும் என்று நம்பினேம்; ஆனல்?....... அந்தத் துணி மூட்டைகளில் சில பட்டுக்கோட்டையில் அப்படியே மூலையில் கிடப்பதாக இப்போது தகவல் கிடைத்திருக்கிறது. இந்த இலட்சணத்தில் நடைபெறுகிறது இந்தக் காங்கிரசாரின் நிர்வாகம்.

"ஏழை-எளிய மக்கள், பாட்டாளி, தொழிலாளத் தோழர்கள், புயலால் அவதியுற்ற தங்களைப் போன்ற மக்களுக்காக, காலணு—அரையணுக்களாகத் தந்த பணத்திலிருந்து பெறப்பட்ட துணிகள் பாதிக்கப்பட்டவர்களுக்குத் தரப்படாமலேயே மூன்ருண்டுகள்வரை பட்டுக்கோட்டையில் மூட்டை கட்டி வைக்கப்பட்டிருக்கின்றன. இந்த இலட்சணத்தில், நிர்வாகத்தை நடத்திச் செல்லும் மந்திரி சபையில் உள்ள சுப்பிரமணியம் கூறியிருக்கிருர்—'இப்போது, தனிப்பட்டவர்கள் திரட்டுகிற நிவாரண வசூலுக்குப் பணம் தரவேண்டாம்'—என்று!

"தனிப்பட்டவர்களை நம்ப வேண்டாம் என்று கூறுவதற்கு இவருக்கு என்ன அருகதை இருக்கிறது? இவரையும், இவரது நிர்வாகத்தையும் நாங்கள், மக்கள் நம்ப முடியாது என்பதற்கு எங்களிடம் ஆதாரம் இருக்கிறது — ஆதாரம் காட்டுகிறேம்,"

என்று, தோழர் மு. கருணாநிதி, 21—12—55 அன்று சென்னையில் நடைபெற்ற மாநில மாநாட்டு நிதியளிப்புக் கூட்டத்தில் பேசுகையில் குறிப்பிட்டார்.

தொடர்ந்து பேசுகையில் அவர் குறிப்பிட்டதாவது :—

"இந்த முறை புயலும், வெள்ளமும் ஏற்பட்டபோது, காமராசர் ஓடியாடி நிவாரண வேலையில் ஈடுபடுகிருர்; பண்டித நேரு ரூ. 1½ இலட்சம் அனுப்பிவைத்திருக்கிருர்; வேறுபல தனிப்பட்ட ஸ்தாபனங்களும், பத்திரிகைகளும் நிதி திரட்டுகின்றன. பல கட்சிகளும் நிவாரண வேலைகளில் ஈடுபடுகிருர்கள்; ஆனல், சென்றமுறை, மூன்ருண்டுகளுக்கு முன் தஞ்சை, திருச்சியில் புயல் வீசியபோது,

(4-ம் பக்கம் பார்க்க)

## திரு-தமிழக மலைச் செல்வங்களை அழிக்க முயற்சி?

### ரப்பர், தேக்குமரங்கள் வெட்டி வீழ்த்தப்படுகின்றனவாம்!

திரு—தமிழக மலைச் செல்வங்களான ரப்பர் மரங்களும், தேக்கு மரங்களும் ஏராளமாக வெட்டப்பட்டு, லாரி லாரியாகப் பல இடங்களுக்கும் கொண்டு செல்லப்படுவதாக தகவல் கிடைத்துள்ளதாம். இதனுல் வெகு விரைவில் தென் - திருவிதாங்கூரிலுள்ள காடுகள் அழிக்கப்பட்டு விடுமோ என்று சந்தேகம் ஏற்படுகின்றது. தடிக்காரன்கோணம் காட்டுப் பிரதேசத்தில் இந்த அக்கிரமம் நடைபெறுவதாகக் கூறப்படுகிறது. (4-ம் பக்கம் பார்க்க)

## 'தமிழ் நாட்டில் புதிய தொழில்கள் நிர்மாணிக்கவில்லையே!'

### '20 இலட்சம் மக்களுக்கு எவ்வாறு வேலை தருவது?'

### 'இந்தியப் பேரரசின் ஆதரவின்மையே தொழிலின்மைக்குக் காரணம்'

தொழிலதிபர் அனந்தராமகிருஷ்ணன் அறிவிப்பு

"இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் மொத்தத்தில் 1,20,00,000 நபர்களுக்கு வேலையளிக்கப்போவதாகக் கூறப்படுகிறது. அதன்படி, தமிழ் நாட்டில் மட்டும் 20 லட்சம் மக்களுக்கு வேலை கொடுத்தாக வேண்டும். எனவே, அவ்வளவு வேலைகளையும் இப்பகுதியில் எவ்வாறு தரப்பட இருக்கிறது?

"இப்பகுதியில் தேவையான அளவில் தொழில்கள் நிர்மாணிக்கப்படவில்லை; இது வருந்தத்தக்கது.

"இந்நிலைக்கு, பணம் கிடைக்கப்பெருமையோ, மனித சக்திக் குறைவோ காரணமல்ல; புதிய தொழில்களை நிர்மாணிக்கும் மக்களிடம் உறுதிப்பாடு இன்மையும், அதிகார(இந்தியப் பேரரசு)த்திலுள்ளவர்களிடமிருந்து சாதகமான உதவி கிடைக்கப் பெருமையுமே பெரிதும் காரணமாகும்.

"பலவிதத் தொழில்களைத் துவங்குவதற்குத் தென்னுட்டில் வசதி இருக்கிறது. பாக்சைட் அலுமினியம் தொழிலை சேலத்தில் ஏற்படுத்துவதை எடுத்துக்காட்டாகக் குறிப்பிடலாம்."

—இலட்சுமிபுரம் இளைஞர் சங்கத்தின் பதினெட்டாவது ஆண்டு விழாவிற்குத் தலைமை வகித்துப் பேசும்பொழுது, தொழிலதிபரான எஸ். அனந்தராமகிருஷ்ணன் மேற்கண்டவாறு குறிப்பிட்டார்.

### காமராசர் பெருமிதம்!

சென்னை, டிச. 21—

தென் மாவட்டங்களில் புயலினுல் பாதிக்கப்பட்டவர்களுக்குப் பிரதமர் நேரு அனுதாபம் தெரிவித்ததாக சென்னை முதலமைச்சர் காமராசர் பத்திரிகை நிருபர்களிடம் கூறியிருக்கிருர்.

## 6,000 பேர் வேலையிழப்பர்!

புதுடில்லி டிச. 21—

"பாதுகாப்புத் துறையில் மேற்கொள்ளப்படும் ஆட்குறைப்பின் விளைவாக 6,000 'சிவிலியன்' ஊழியர்கள் வேலை இழப்பர்,"

என்று, தொடர்புடைய துறை துணை அமைச்சர் சுர்ஜித் சிங் மஜிதியா, மாநிலங்கள் சபையில் தெரிவித்திருக்கிருர்

'ஒரு பிரிவிலிருந்து விலக்கப்படுபவர், அவர் 'ரோட்டீஸ்' காலத்தில் இதர பிரிவில் வேலை காலியாயிருந்தால் அதற்கு எடுத்துக்கொள்ளப்படுவார்' என்றும் அவர் கூறினர்.

## யோசிக்கிருர்கள்!

ஒரு சம்பளக் 'கமிஷன்' நியமிக்கும் யோசனை பரிசிலனையிலிருந்து வருவதாக தொழிலாளர் துறை துணை மந்திரி அபீத் அலி மக்கள் சபையில் தெரிவித்திருக்கிருர்.

## இரயில்வேத் துறையில் ஊழலுக்குமேல் ஊழல்!

### ஓட்டை இயந்திரங்களைக் கொள்முதல் செய்த விசித்திரம்

தணிக்கைக் குழு தரும் தகவல்

"இங்கிலாந்திலுள்ள ஒரு தொழில் நிறுவனத்திடம், புகைவண்டி இயந்திரங்களுக்குத் தேவைப்படும் 200 'சிலிண்டர்'கள் வாங்கப்பட்டன. அப்பேரம் லண்டன் நகரிலிருக்கும் இந்தியப் பேரரசின் பொருள் கொள்முதல் துறையினுல் நடத்தப்பட்டது; அவ்வாறு வாங்கப்பட்ட இருநூறு 'சிலிண்டர்'களில் 150 'சிலிண்டர்'கள் மூன்று ஆண்டுகளுக்குள்ளாக உடைப்பு கண்டுவிட்டன.

(தொடர்ச்சி 4-ம் பக்கம் பார்க்க)

Best copy available.

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

சென்னை 22—12—'55 வியாழன்


## சூடான் சுதந்திரம்

சூடான், சுதந்திரம் அடைந்துவிட்டதாக அறிவித்துவிட்டது. அம்முடிவுடன், 1899ல் இங்கிலாந்திற்கும்—எகிப்திற்கும், சூடான் பிரதேசம் பற்றி ஏற்பட்டிருந்த உடன்படிக்கையும் முடிவிற்கு வந்துவிட்டது.

சூடான் நாட்டின் கவர்னர்-ஜெனரலாக இருந்துவந்த ஆங்கிலேயரும் சில நாட்களுக்கு முன் தனது பதவியைவிட்டு விலகிவிட்டார். அதன் விளைவாக, சூடான் மக்களின் விருப்பத்திற்குகந்த ஒரு ஆட்சி முறையை உருவாக்கிக் கொள்ள, அதற்கேற்ற ஒரு நிறுவனத்தை நிறுவிக் கொள்வதற்குரிய பொறுப்பு முழுதும், சூடான்பாராளுமன்றத்தையே சார்ந்துவிட்டது.

தனது செல்வ வளத்திற்காக, எப்படியும் சூடான் பிரதேசத்தைத் தனது ஆதிக்கத்திலேயே வைத்துக்கொள்ள எகிப்து முயன்று வந்திருக்கிறது. அம்முயற்சியில், விரட்டப்பட்ட நாஜிப்பும், அவரை விரட்டிய கர்னல் நாசரும் பெரிதும் ஈடுபட்டு வந்தனர்.

சூடான் பிரதேசத்தை ஒரு புகலாகக் காட்டியே கூட்டுத் தோழர்களை, தனக்கு எதிராகக் கிளம்பாமல் தடுத்துநிறுத்தி வந்திருக்கிறார் நாஜிப். அது போன்றே, சூடான் தயவுக்காகவே நாஜிப்பை விரட்டுவதிலும் காலங் கடத்தி வந்துள்ளனர், கர்னல் நாசர் குழுவினர்.

சூடான் பாராளுமன்றம், தனது சுதந்திரத்தைத் தெளிவாக அறிவித்துவிட்டது. இருந்தாலும், எகிப்துடன் நட்புறவுடன் இருக்க விரும்புவதாக சூடான் பாராளுமன்றம் அறிவித்தும் உள்ளது.

நைல் நதி நீரை அதிக அளவில் பயன்படுத்துவதற்காக பெரிய அணை ஒன்றைக் கட்ட எகிப்து திட்டம் போட்டு இருக்கிறது. அப்பெரும் அணையைக் கட்டி முடிப்பதில் எகிப்துக்கு உதவி செய்யப் போட்டியிட்டு முந்துகின்றன, பிரிட்டனும், ரஷ்யாவும்.

நைல் நதி நீரை அணையிட்டுத் தடுத்து பயன்படுத்தக் கருதும் எகிப்தின் முயற்சிக்கு சூடானின் ஒப்புதலும், ஒத்துழைப்பும் வேண்டற்பாலதாகும். எனவே, சூடான் சுதந்திரப் பிரகடனம், தனது நெடுநாளைய விருப்பத்திற்கு மாறுபட்டதாக இருந்தபோதிலும்கூட, அதனால் ஏற்பட்டுள்ள மனப் புழுக்கத்தை மறந்து, சூடான் போக்கிற்கு இணக்கம் தெரிவிக்க எகிப்து முன்வந்தே ஆகவேண்டும்.

அதுபோன்றே, சூடான் பருத்தி இங்கிலாந்தின் முக்கியத் தேவையாக இருப்பதால், சூடான் சுதந்திர பிரகடனத்தை பிரிட்டனும் வரவேற்கவே செய்யும். அதுவுமன்றி, நைல் நதியின் துவக்க நிலைக்கு மிக அருகில் சூடான் இருப்பதால், அந்த நீரைக்கொண்டு தனது வளத்தை இனித்தான் தேடிக்கொள்ள வேண்டிய கட்டாயத்தில் சூடானும் இருந்துவருகிறது. இத்துறையில் இங்கிலாந்தின் உதவியும் ஒத்துழைப்பும் சுதந்திர சூடானுக்கு இன்றியமையாததாகும்.

உள்நாட்டுச் சிக்கலுக்கு சூடான் இரையாகாமலும் இல்லை. வடக்கு தெற்குப் பிணக்கு அங்கு இருந்துவருகிறது. சென்ற செப்டம்பரில் நடைபெற்ற தென் பகுதி குழப்பம் போன்ற ஒன்றும், சுதந்திரம் அடைந்துவிட்டதினால், இனி நிகழாது எனக் கொள்ளமுடியாது.

சூடான் வட பகுதியில் அரபு மரபைச் சார்ந்தவர்களும், தென் பகுதியில் மாறுபட்ட மரபினரும் வாழ்ந்து வருகின்றனர். வடக்கிலுள்ள அளவிற்கு தெற்குப் பகுதியில் அரசியல் விழிப்புணர்வு இல்லை.

வடக்குப் பகுதியினர் போலல்லாமல் தெற்குப் பகுதியில் வசிக்கும் மக்கள் நாகரீகத்திற்குப் பிற்பட்ட மக்களாக உள்ளனர். காட்டு மக்களாகவும் உள்ளனர். காட்டுமக்களாகவும் அவர்கள் இருந்துவருகின்றனர்.

இவ்வுயர்வு-தாழ்வு சீர்செய்யப்படத்தக்க வகையிலும், தென் பகுதி மக்கள் வடபகுதியினரை சந்தேகிக்காத நிலையிலும், உருவாக்கப்பட இருக்கும் ஆட்சி அமைப்பு உருவாக்கப்பட்டாக வேண்டும். அரசியல் ஆக்க மன்றத்திலும் தென் பகுதியினருக்கு ஏற்புடைய பிரதிநிதித்துவம் வழங்கப்பட வேண்டும்.

சுதந்திரத்தைப் பிரகடனப்படுத்துவதிலும், மேற்கூறிய முறையில் நாட்டாட்சியை நிர்மாணிப்பதிலும்தான், சூடான் நாட்டின் அரசியல் வாதிகளின் அறிவுத் திறம் அறியப்பட வேண்டும். அத்தகு அறிவுத் திறம் அவர்களுக்கு உண்டா இல்லையா என்பதை எதிர் காலம்தான் மெய்ப்பிக்க வேண்டும்.

## சென்னை சர்க்காருக்கு அனுமதி மறுப்பு

புதுடில்லி, டிச 20—

தஞ்சையில் ஒரு எரி சாராய உற்பத்தித் தொழிற்சாலையை அமைப்பதற்கு, சர்க்காரே முயற்சிக்காமல் தனிப்பட்ட முதலாளிகள் யாரேனும் துவங்குவதற்கு ஏற்பாடு செய்யுமாறு, சென்னை மாநில சர்க்காருக்கு மத்திய சர்க்கார் யோசனை தெரிவித்திருப்பதாகத் திட்டத்துறைத் துணை அமைச்சர் எஸ் என் மிச்ரா மக்கள் சபையில் தெரிவித்திருக்கிறார்.

ஆண்டுதோறும் 10 இலட்சம் காலன் எரி சாராயம் உற்பத்தி செய்யும் ஆலை ஏற்படுத்தவேண்டும் என்பது சென்னை சர்க்கார் தெரிவித்திருந்த திட்டம். இதற்கு முதலீட்டுச் செலவாக ரூ. 30 இலட்சமும், ஆண்டுதோறும் ரூ. 6 இலட்சமும் செலவாகும் என்றும் சென்னை சர்க்கார் தெரிவித்திருந்தனர்.

இதைத்தான் மத்திய சர்க்கார் ஏற்க மறுத்துவிட்டு, தனிப்பட்டவர்கள் இத்தொழிலில் வெற்றி பெற்றிருக்கிறார்கள் என்று சாக்குக் கூறி, ஆலை துவக்குவதற்கு சென்னை சர்க்காருக்கு அனுமதி மறுத்திருக்கிறார்கள்.

## 'காந்தியாரைப் பழிக்கப்போகிறதா காங்கிரஸ் மேலிடம்?'

### 'மொழிவழிமாநிலம் எப்படி தவருன கோரிக்கையாகும்?'

'ரூபா, அணா, பைசாவை வாழ்வுமுறையாகக்கொண்ட

### குஜராத்தியர்களுடன் மராத்தியர் எப்படி இணைந்து வாழ்வது?'

### மாநிலங்கள் சபையில் தியோகர்கார் முழக்கம்

"மாநிலங்களைத் திருத்தி அமைக்கும்போது, மக்களின் கருத்துக்கு மதிப்பளிக்க வேண்டுவது மிக அவசியமானதாகும்.

"மக்களை அடக்கி ஆள வேண்டும் என்று நினைத்த வெள்ளை ஏகாதிபத்தியவாதிகள் காலத்தில்தான் மக்களின் கருத்துக்கு மதிப்பளிக்கப்படாமலிருந்தது; இப்போதும் அந்த நிலை நீடிக்கக்கூடாது.

"மாநிலங்களைத் திருத்தி அமைப்பது, மொழி அடிப்படையில்தான் அமைந்தாக வேண்டும். ஆந்திர மாநிலம் அமைவதற்கு இதுவே அடிப்படையாகவிருந்தது. 1928-ம் ஆண்டிலேயே கூட நேருவின் அறிக்கை இந்தக் கொள்கையை ஏற்றுக்கொண்டிருக்கிறது.

"காந்தியார்கூட இதனை ஆதரித்து வந்திருக்கிறார்—1931ம் ஆண்டில், காந்தியார், டாக்டர் இராதாகிருஷ்ணனுக்கு எழுதிய கடிதம் ஒன்றில், 'மாகாணங்களைத் திருத்தி அமைப்பதற்கு மொழி அடிப்படையைக் கொள்ள வேண்டும் என்பதே என் நோக்கமாயிருந்து வந்திருக்கிறது. இந்த எண்ணம் எனக்கு ஆந்திர இயக்கத்திலிருந்து உதித்ததாகும்; எனவே, ஆந்திர மக்கள் இப்போதே உடனடியாக 'ஆந்திரா ஒரு மாகாணம்' என்ற அந்தஸ்தைப் பெறுவது எனக்கு மிக மகிழ்ச்சி தருவதாகும்,' என்று குறிப்பிட்டிருக்கிறார். மேலும் பல கட்டுரைகளிலும் காந்தியார் இந்தக் கருத்தை வெளியிட்டிருக்கிறார்.

"எனவே, மராட்டியம் கோருவது தவறு என்று எவரேனும் என்னிடம் கூறுவதானல், அவர்களுக்குச் சொல்கிறேன்—'என்னைக் குறை கூறாதீர்கள்; குற்றம் சுமத்தப்படவேண்டியவன் நானல்ல; காந்தியாரை வேண்டுமானல் குறைகூறுங்கள்'—என்றுதான் நான் கூறுவேன்.

"நாம் வெளிநாட்டவருக்கு அடிமைப்பட்டிருந்தபோது மேற்கொண்ட ஒரு கொள்கை, நாம் சுதந்திரம் பெற்ற பிறகு எப்படித் தவறுடையதாகிவிட முடியும்?

"'காந்தியார் கூறிய அடிப்படை எங்களுக்குப் பிடிக்கவில்லை; அதை மாற்றவேண்டும்' என்று கருதுவீர்களேயானல், அதைத் தெளிவாக்கிவிடுங்கள்; அந்தக் கருத்துக்கொப்ப நாங்கள், எங்கள் மனப்போக்கை மாற்றிக்கொள்ள முயற்சிக்கிறோம். ஆனல் அதை விடுத்து, அரைகுறை மனத்துடன் காரியங்களைச் செய்வது, இந்தியாவின் வளர்ச்சிக்கு உகந்தது அல்ல.

"பம்பாய் நகரம் பூகோள ரீதியாக மராட்டியத்தைச் சேர்ந்தது என்று மாநிலக் குழுவும், காங்கிரஸ் செயற்குழுவும் முடிவு செய்திருக்கின்றன. பம்பாய் நகரில் தனிப் பெரும்பான்மையினரான மராட்டியர்களே வாழ்கின்றனர். அப்படியிருக்க, மராட்டியத்தில் பம்பாயை இணைக்க குழு மறுத்தது ஏன்?"

—என்று டில்லி மாநிலங்கள் சபையில், சம்யுக்த மராட்டியக் கோரிக்கையை வலியுறுத்தி, மராட்டியப் பிரதேசக் காங்கிரஸ் தலைவரான டி ஆர். தியோகர்கார் குறிப்பிட்டிருக்கிறார்.

மேலும் அவர் கூறியதாவது:—

"பம்பாயை மராட்டியத்திற்கு மாநிலக் குழுவினர் தாராததற்குக் காரணம், சிலர் செய்த தவருன முறையீடுகளேயாகும்; அதனல்தான் மராட்டியரைக் கண்டு அஞ்சிவிட்டிருக்கின்றனர்.

"ஒரு சமமான மாநிலம் என்று பேசுவதின் மூலம், பெரும்பான்மை பலம் இந்த வகுப்பிற்கா—அந்த வகுப்பிற்கா என்ற எண்ணத்தை வளர்த்து, எங்களில் ஒருவருக்கொருவரிடை சண்டை மூட்டிவிடும் வேலையில் ஏன் ஈடுபடுகிறீர்கள். குஜராத்தியரும்—மராட்டியரும் மோதிக்கொள்வதை நான் விரும்பவில்லை. அந்த நிலை, ஒற்றுமையின்மை, பாதுகாப்பின்மை ஆகியவற்றை வளர்த்து கசப்பான விளைவுகளை உண்டாக்கக்கூடியதாகும். இப்போது மராத்தியர்—குஜராத்தியர் உறவு சுமூகமானதாயிருந்து வருகிறது. ஆனல மாநிலக் குழுவினர், கலகங்களுக்கான விதையை ஊன்றிவிட்டிருக்கிறார்கள்; இதனைத் தவிர்க்க வேண்டும் என நாங்கள் விரும்புகிறோம். எனவேதான், நாங்கள் பிரிந்து போவது என்றால், அது இப்போதே நிகழ வேண்டும் எனறு கூறுகிறோம்

"மேலும், மராட்டியரைப் பற்றி குழுவினர் எழுதியுள்ள குறிப்புகளை எந்த ஒரு இந்தியனும்—குறிப்பாக மராட்டியனும் சகித்துக் கொள்ளமாட்டான் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். மராத்தியரைப் பற்றி எவரேனும் தவருன சிலவற்றை எடுத்துக் கூறியிருந்தால் எங்களை அழைத்துக் குழுவினர் விளக்கம் கேட்டிருக்கலாம்; அதை விடுத்து, மராட்டியரைப் பற்றிப் புண்படுத்தும் வகையில் குழுவினர் நடந்துகொண்டிருப்பதை நாங்கள் சகித்துக் கொள்ள முடியுமா?

"இவற்றிற்கெல்லாம் குஜராத்தி மக்கள் அல்ல காரணம்; பம்பாய் முதலாளிகளும், வர்த்தகர்களும் தான் காரணம்; நான் உரக்கச் சொல்லுவேன் — குஜராத்தியர் இந்தியாவிலேயே மிக நல்ல மக்கள்; அவர்கள் தாராள மனதும், இரக்கச்சிந்தையும் உடையவர்கள்; ஆனல, துரதிருஷ்டவசமாக எங்களிலிருந்து வேறுபட்ட மனப்போக்கு—உள்நோக்கு உடையவர்கள் அவர்கள் எப்போதும் ரூபா அணா, பைசா பற்றிப் பேசுபவர்கள்; நாங்கள் ஷேக்ஸ்பியர், காளிதாசர், பவபூதி என்றே எப்போதும எண்ணிக்கொண்டிருப்பவர்கள் இதற்கு வேறுபாடு கொண்டவர்கள் எப்படி ஒன்று சேர்ந்து இணங்கி வாழ முடியும்?"

மேலும், 30 நிமிடம் வரை சம்யுக்த மராட்டியக் கோரிக்கைக்காக நியாயவாதமாடிய தியோகர்கார், பம்பாயைத் தனி மாநிலமாக்க வேண்டும் என்ற கோரிக்கையை வன்மையாகக் கண்டித்ததுடன், அது மிகவும் ஆபத்தானதோர் போக்கு என்றும் எச்சரித்திருக்கிறார்.

இறுதியில் அவர் கூறினர்:—

"இந்தியாவிற்காக மராட்டியம் எத்தகு தியாகமும் செய்யத் தயார் என்று உறுதி கூறுகிறேன். மராட்டியர், காங்கிரசால் வளர்க்கப்பட்டவர்கள்தான்; ஆனல், எங்களை மானமிழந்து, தாழ்வுற்று வாழச் சொல்லாதீர்கள். மனக்குறைவுடன் நாங்கள் உங்களுக்கு பலம் தர முடியாதவர்களாகிவிடுவோம்."

### வான வெளியில் செல்லும் 'செயற்கைச் சந்திரன்'

#### மக்கள் வரலாற்றில் மிகப்பெரிய விஞ்ஞான சாதனையாம்!

மனிதனல் தயாரிக்கப்பட்ட செயற்கை கிரகத்தின 'பிளாஸ்டிக்' மாதிரி அமெரிக்க இயற்கைச் சரித்திரக் கண்காட்சியில் பொது மக்கள் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளதாம்.

வானவெளியில் ஒரு 'சந்திரனை' அமெரிக்கா அனுப்புமென்ற அறிவிப்பு வெளியிட்ட பிறகு பொது மக்கள் பார்வைக்கு வைக்கப்பட்ட முதலாவது 'மாதிரி' இதுதானும்.

'உண்மையான செயற்கைக் கிரகம்' மக்கள் வரலாற்றில் மிகப்பெரிய விஞ்ஞான சாதனைகளில் ஒன்ருகுமாம்

மணி ஒன்றுக்கு 18,000 மைல் வேகத்தில் செல்லக்கூடிய இச் செயற்கை கிரகம், 90 நிமிடங்களுக்கு ஒருதடவை பூமியைச் சுற்றும் வான வெளியிலுள்ள காந்த மண்டலத்தையும், விஞ்ஞானிகளுக்கு அக்கரையூட்டும் மற்றத் துறைகளையும் அளக்கக்கூடிய மிக மெல்லிய விஞ்ஞானக் கருவிகள் இச்செயற்கை கிரகத்தில் இருக்கும் வானவெளிப் பிரயாணங்களில் கிடைக்கும் விஞ்ஞான விஷயங்களைப் பூமிக்கு அனுப்புவதற்கு ரேடியோக் கருவியும் இதில் பொருத்தப்பட்டிருக்கும்

சுமார் 200 மைல் முதல் 300 மைல் வரையிலும் 'செயற்கை கிரகத்'தை எடுத்துச் செல்லக் கூடிய 'வைகிங் ராக்கெட்'டின் மாதிரி ஒன்றும் கண்காட்சியில் வைக்கப்பட்டுள்ளதாம்.

'ராக்கெட்'டிலிருந்து அங்கு பிரிக்கப்படும் 'செயற்கை கிரகம்', சந்திரனைப் போலவே பூமியைச் சுற்ற ஆரம்பிக்கப்படும்.

### தங்கத் தொட்டில் 'தவறி' விட்டதாம்!

இந்தூர், டிச. 19—

கடந்த 200 ஆண்டுக் காலமாக ஹோல்கார் அரச குடும்பத்திற்குச் சொந்தமாக இருந்துவந்த தங்கத் திலைான தங்கத் தொட்டில் காணமல் போய்விட்டதாம்.

சுமார் 46 இராத்தல் தங்கத்தினல் செய்யப்பட்ட இத்தொட்டிவின் விலை ரூ 1½ இலட்சம் பெறுமானமிருக்குமாம். மாநிலம் முழுமையிலும் போலீசார் இதைத் தேடி வருகின்றனராம்

நர்மதை நதிக்கரையிலுள்ள மகேசுவரத்தில், இந்தூர் மகாராஜாவுக்குச் சொந்தமான அரண்மனையில், இருந்துவந்த இத்தொட்டிலுடனிருந்த கிருஷ்ணனின் சிலையும் களவாடப்பட்டதா என்பதுபற்றி தெரியவில்லை.

அரண்மனையைச் சுற்றி ஆயுதந்தரித்தப் போலீசார் காவலிருந்தும் நதிக்கரையோரமிருந்த அரண்மனை மதிலின் 60 அடி உயரமுள்ள சுவரைத் தாண்டிக் குதித்து, அத்தொட்டில் களவாடப்பட்டிருக்கிறதாம்.





## 'வட ஆற்காடு மாவட்டம் ரூ. 10,001 தரவேண்டும்'

### மாவட்டக் கழகக் கூட்டத்தில் தோழர் ஏ. எல். சி. கிருஷ்ணசாமி தீர்மானம்

#### நிவாரண வேலைகளில் தோழர்கள் தீவிரம்

தமிழ்நாட்டில் இயற்கை விளைத்த கொடுமைக்காளான மக்களின் அவதி துடைப்பதற்காகத் தமிழகமெங்கணுமுள்ள நமது கழகத் தோழர்கள் பல வழிகளிலும் முயற்சிகளைத் தீவிரமாக மேற்கொண்டிருப்பதை நாடு நன்கு அறியும். திரட்டிய நிவாரண நிதி, பண்டங்கள் முதலியனவற்றைச் சேகரித்து, சம்மந்தப்பட்டவர்களுக்கு அனுப்பிவைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

வட ஆற்காடு மாவட்டக் கழகக் கூட்டம் 27—12—55-ல் கூடும்போது, கீழ்க்கண்ட அவசரத் தீர்மானங்களை தோழர் ஏ. எல். சி. கிருஷ்ணசாமி அவர்கள் கொண்டுவருவதாக தலைவருக்கு அறிவித்திருக்கிறார்:—

"பாதிக்கப்பட்ட மக்களுக்கு ரூ 10,001 இந்த மாவட்ட ஆட்சி மன்றத்தின் சார்பில் அரசாங்கம் சேகரிக்கும் நிதிக்குத் தருவதென இக்கூட்டம் தீர்மானிக்கிறது."

அன்றியும், தஞ்சை, திருச்சி, இராமநாதபுரம் மாவட்டங்களில் புயலால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு அனுதாபம் தெரிவித்தும், நிவாரண வேலைகளில் உடனடியாக நடவடிக்கை எடுத்து மக்களின துயரை ஓரளவிற்கு போக்க முயற்சி எடுத்துக்கொண்ட முதலமைச்சர் காமராசருக்குப் பாராட்டுத் தெரிவித்தும், பாதிக்கப்பட்ட மக்களுக்குப் பொருள், உணவு, உடை ஆகிய உதவிக்கெனத் திரட்டப்படும் நிதிக்குப் பொதுமக்கள், ஊராட்சி மன்றங்கள், நகராட்சி மன்றங்கள், மாவட்ட ஆட்சி மன்றங்கள், வணிகர்கள், கலைஞர்கள் ஏராளமான பொருளுதவி தர வேண்டுமென்று கோரியும் தீர்மானங்கள் கொண்டுவரப்பட்டுள்ளது.

**திருச்சி**

18—12—55 காலை 9 மணிக்கு திருச்சி தேவர் மன்றத்தில் தி மு க. சார்பில், சிறப்புக் கூட்டம் புயல் நிவாரணத்திற்காக நடத்தப்பட்டது தோழர் அம்பில் தர்மலிங்கம் தலைமை தாங்கினர். தோழர்கள் மு கருணாநிதி, எம். எஸ் மணி ஆர் நாகசுந்தரம் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

புயல் நிவாரணத்திற்காக தோழர்கள் ம. சி ராமமூர்த்தி முனியப்பன், வி எம் முஸ்தபா, பால் பூனியன் தோழர் (பெயர் தெரியவில்லை) ஒருவர் புதிய வேட்டிகள் தந்தனர்.

கூட்டத்தில் கிடைத்த ரூ. 500-க்கும் கைத்தறி வேட்டிகள் வாங்கி தோழர் கருணநிதி மூலமாக 19—12—55ல, தஞ்சை மாவட்டத்தில் புயலால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் விநியோகம் செய்யப்பட்டது.

**லால்குடி**

சர்வ கட்சிக்கூட்ட முடிவின்படி வீடுதோறும் சென்று 33 மூட்டை அரிசி, 27 படி பருப்பு, 3 கட்டு புளி, 1 கட்டு கீற்று, 2 வீசை மிளகாய், 100 புதுத் துணி உருப்படிகள், 300 பழைய துணி உருப்படிகள் திரட்டினர். வசூல் செய்தவற்றை திருச்சி மாவட்ட கலெக்டர் அவர்கள் அனுமதியின் மீது பரமக்குடிக்கு அரிசி 17 மூட்டை—பருப்பு 27 படி—புளி 3 கட்டு—மிளகாய் 2 வீசை—கீற்று 1 கட்டு—100 உருப்படிகள் கொண்ட புதுத் துணிகள் 1 மூட்டை — 300 உருப்படிகள் கொண்ட பழைய துணிகள் 1 மூட்டையும், திருத்துறைப்பூண்டிக்கு அரிசி 10 மூட்டையும், புதுக்கோட்டைக்கு அரிசி 6 மூட்டையும் அனுப்பி வைக்கப்பட்டன.

**கோவை**

நகர தி. மு. கழகச் சார்பில், பொதுமக்களிடத்தில் நன்கொடை மூலமாக ரூ. 161—9—0-ம், உண்டியல் மூலமாக 118—7—0-ம் வசூல் செய்து, மொத்தம் ரூ 280 கோவை மாவட்டக் கலெக்டரிடம் கொடுத்திருப்பதுடன், சுமார் ரூ 600 மதிப்புள்ள பழைய-புதிய துணிகளையும் வசூலித்துத் தரப்பட்டது.

**திருப்பூர்**

11—12—55 காலை 8 மணி முதல் மாலை 6½ மணி வரை திருப்பூர் தி மு கழகச் செயலாளர் தலைமையில், தி. மு கழகத் தோழர்களும், அனுதாபிகளும் நகரின் முக்கிய பகுதிகளுக்குச் சென்று உண்டியல் மூலம், ரூ 106-ம். பழைய துணிகளாக 50 உருப்படிகளும், அரிசி ½ மூட்டையும் திரட்டினர்.

கழகத் தோழர் பாலசுப்பிரமணியம் அவர்கள் ரூ. 150 மதிப்புள்ள துணியையும்,வாலிபாளைய அழகிரி மன்றம் ரூ 10-ம், இந்நகர தி. மு கழகச் செயலாளர் வசம் அளித்தனர்.

தி. மு கழகச் சார்பில் சேர்ந்த மொத்தப் பணத்திற்கு கைத்தறி ஆடைகள் வாங்கி,தோழர் பாலசுப்பிரமணியம் அளித்த துணிகளுடன் சேர்த்து தஞ்சை மாவட்ட கலெக்டருக்கு அனுப்பப்பட்டது. அத்துடன் ½ மூட்டை அரிசியும், 50 பழைய துணிகளும் அனுப்பப்பட்டது.

**கடலூர்**

கடலூர் புதுநகர், பழைய நகர், மற்றும் சுற்று வட்டாரங்களில் புயல் நிவாரண நிதிக்காக பல கட்சித் தோழர்களும் ஒன்று சேர்ந்து ஏராளமான துணிகளையும், அரிசி மூட்டைகளையும், பணமும் வசூல் செய்து, புயல் நிவாரணக் குழுவுக்கு அனுப்பப்பட்டது. கடலூர் பழைய நகர் தி. மு கழகம் முக்கிய பங்கெடுத்துக் கொண்டது குறிப்பிடத்தக்கது.

**பரமக்குடி**

தோழர் ஜி கோவிந்தன் எம் எல் ஏ., தலைமையில் 25 பேர் கொண்ட புயல் நிவாரண நிதிக் குழு ஒன்று அமைக்கப்பட்டது கம்யூனிஸ்டு கட்சியைத் தவிர ஏனைய கட்சித் தோழர்கள் குழுவில் பங்கு பெற்றுள்ளனர். தி மு கழகச் சார்பில் தோழர்கள் எஸ். சரணமணாளன், எஸ் தண்டபாணி, எம். ஏ. வகாப் பங்கேற்றுள்ளனர்.

இந்தக் குழுக் கூட்டத்தில், நிவாரண நிதி திரட்டிப் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவி செய்வதென்றும், பரமக்குடி நகரை இருகூருகப் பிரித்து, அதிக சேதத்தைத் தரும் வேந்தோணி ஏரிக் கால்வாயை மூடி பழைய கால்வாயை அரசாங்கம் புதுப்பிக்க வேண்டுமென்றுகேட்டுக்கொண்டும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

**விளாப்பாக்கம் (வ. ஆ.)**

18—12—55 மாலை திரு. வி. க நிலையில், அழகிரி நூலகத் திறப்பு விழா நடைபெற்றபோது, வ. ஆ. மாவட்டம் விளாப்பாக்கம் தி மு கழகச் சார்பில், 38 புதிய கைத்தறி துணிகள் புயல் வெள்ள நிவாரணத்திற்கென தோழர் கண்ணதாசன் வசம் ஒப்படைக்கப்பட்டது.

**சென்னை—1-வது வட்ட தி. மு. கழகம்**

11, 14—12—55 தேதிகளில் தோழர் து. கோவிந்தசாமி தலைமையில், தோழர்கள் பொ. சம்பந்தன், வ. கண்ணன், தி. செங்கல்வராயன், க. பட்டாபி, அ. சுந்தரம், ச. கிருட்டிணன், சா. இராமலிங்கம், மற்றும் பலர் தொண்டையார்பேட்டை வீதிகள் தோறும் சென்று, ரூ. 31-12-6; அரிசி 4 படி 7 ஆழாக்கு; பழைய துணி உருப்படிகள் 82 திரட்டினர்.

**சென்னை—12-வது வட்ட தி. மு. கழகம்**

17—12—55ல், துறைமுக வட்ட கழகத் தோழர்கள் வீதிகள் தோறும் சென்று உண்டியல் மூலம் ரூ. 15 திரட்டினர்.

**சென்னை—31-வது வட்ட தி. மு. கழகம்**

14—12—55ல், இவ்வட்டத்திலுள்ள வீதிகள்தோறும் ஊர்வலமாகச் சென்று, கழகத் தோழர்கள் ரூ 123—3—0; அரிசி 37½ படி; துணிகள் 862 வசூலித்தனர்.

**சென்னை—33-வது வட்ட தி. மு. கழகம்**

சேத்துப்பட்டு வட்டத்தில், கழகத் தோழர்கள் வீடுகள்தோறும் சென்று, ரூ. 25, 80 படி அரிசி, 21 துணி உருப்படிகள் திரட்டினர்.

**சென்னை—35-வது வட்ட தி. மு. கழகம்**

கோடம்பாக்கம் வட்ட கிளைக் கழகச் சார்பில், ரூ. 50-3-3; பிரசாத் பொரஸஸ், விதோ தொழிலாளர் தோழர்களிடம், குருநாதன் நிதி வசூலித்து கிளைக் கழகத்தின் மூலம் கொடுத்தது ரூ 81; ஆக ரூ. 131—3—3 திரட்டினர்.

**சென்னை—40-வது வட்ட தி. மு. கழகம்**

கழகத் தோழர்கள் சேப்பாக்கம் வட்டத்திலுள்ள மக்களிடமிருந்து ரூ. 37—1—6-ம், அரிசி 54 படியும், 164 பழைய துணியையும் திரட்டினர்.

**சென்னை—43-வது வட்ட தி. மு. கழகம்**

11—12—55 காலை 9 மணி முதல் பிற்பகல் 3 மணி வரையில் வட்டத்தின் முக்கிய இடங்களில் எல்லாம் கழகத் தோழர்கள் ஊர்வலமாகச் சென்று, உண்டியல் மூலம் ரூ. 81-9-0-ம்; 98 பழைய துணிகளும், 21¾ படி அரிசியும் திரட்டினர். ஊர்வலத்தின் இடையில் வட்டார நகரசபை உறுப்பினர் தோழர் எம். ஏ. கரீம் அவர்களும் கலந்துகொண்டார்.

## சென்னை சர்க்காரின் புதிய நியாயவார மசோதா

### விவசாயச் செலவு குடியானவர் பொறுப்பாம்

#### நிலவரி மட்டுமே நிலச் சொந்தக்காரர் தருவாராம்

சென்னை, டிச. 21—

நீண்ட நாட்களாக விவசாயிகளுக்கு நலன் பெற்றுத் தருவதற்காக நிலச்சட்டம் கொண்டுவரப்போவதாகக் கூறிவரும் காங்கிரஸ் சர்க்கார், இப்போது நியாயவாரம், குத்தகை பற்றிய மசோதா ஒன்றை வெளியிட்டிருக்கிறார்கள்.

சாகுபடிச் செலவு குடியானவனுடையது; சர்க்காருக்குச் சேர வேண்டிய வரிகள் செலுத்த வேண்டியது நிலச் சொந்தக்காரர்கள்; நிகர மகசூலில் 40 சதவிகிதம் மட்டும் நிலச்சுவான்தாரருக்குக் கிடைக்கும்—என்பவை மசோதாவின் அடிப்படையாக விளங்குகிறது.

இந்த மசோதா அடுத்த ஜனவரித் திங்களில் சட்டசபை கூடும்போது விவாதிக்கப்படும்.

புதிய ஏற்பாடு, 1956 ஏப்ரல் முதல் தேதியிலிருந்து அமுலுக்கு வருமாம்.

அடுத்த பசலி ஆரம்பத்திலிருந்து நியாயவாரம் எப்படியிருக்க வேண்டும் என்பதை மசோதா நிர்ணயிக்கிறது.

விவசாயச் செலவு முழுவதும்—அதாவது, உழுதல், நீர்ப் பாய்ச்சுதல், எரு போடுதல், அறுவடை செய்தல், அடித்தல் முதலியன எல்லாம் சாகுபடியாளருடைய பொறுப்பு என்றும், நிலவரி செலுத்தல் மட்டுமே நிலச் சொந்தக்காரர் பொறுப்பு என்றும் மசோதா கூறுகிறது.

சட்டம் குறிப்பிடும் நியாய வாரத்திற்கு அதிகப்படியாக சாகுபடியாளரிடமிருந்து நிலச் சொந்தக்காரர் வசூலிப்பது கூடாது என்றும் கூறப்பட்டுள்ளது.

மசோதாவின் வாசகங்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியாக விளக்கி, அந்த வாசகங்களுக்கு சர்க்கார் கொள்ளும் பொருளும் தரப்பட்டிருக்கிறது.

மலையாளம், தென் கன்னடம் நீங்கலாக சென்னை மாநிலம் முழுவதிலும் சட்டம் அடுத்த ஆண்டில் அமுலாகும்.

## நிர்வாக இலட்சணம்?

இலட்சுமணபுரி, டிச. 19—

உத்திரப் பிரதேச மாநிலத்தில் 14 மாவட்டங்கள் (6,588 கிராமங்கள்) சம்பந்தப்பட்ட நிலக் குறிப்பேடுகளில் அக்டோபர் இறுதி வரையில் ரூ. 81 இலட்சத்திற்கு தவருன கணக்குகள் கண்டுபிடிக்கப்பட்டதாகவும், ஆனல், இறுதிப் பட்டியலைத் தயாரிப்பதில் ஈடுபட்டிருப்போர இத்தவறுகளைக் கண்டுபிடித்து, ரூ 11 இலட்சத்திற்குத் திருத்தம் செய்தனர் என்றும் தின இதழ் ஒன்றில் செய்தி வெளியாகியுள்ளது.

## கழகச் செய்திகள்

**பொன்மலை-மேலக் கற்கண்டார்கோட்டை தி. மு. க.**

15—12—55 மாலை 7 மணிக்கு, கழக இல்லத்தில் செயலாளர் கே. துரைராஜ் தலைமையில் கழக உறுப்பினர் கூட்டம் நடைபெற்றபோது செயற்குழுவில் ஒப்புக்கொள்ளப்பட்ட கழக வரவு—செலவு கணக்குகள் வாசிக்கப்பட்டும், புயல் நிவாரணத்திற்கென நன்கொடை வசூலிப்பதெனவும், பெருவாரியாகக் கழக உறுப்பினர்கள் சேர்ப்பதெனவும், கழகத்தின் சார்பில் பொங்கல் விழாவை மிகவும் சிறப்பாக நடத்துவதெனவும், அதற்கு ஒரு குழு தேர்ந்தெடுக்கப்பட்டும் முடிவுகள் செய்யப்பட்டன.

**பண்ணைக்காடு (மதுரை) தி. மு. க. பொதுக்கூட்டம்**

16—12—55 பகல் 2½ மணியளவில், பன்னீர்செல்வம் திடலில் தோழர் எஸ். அனந்தநாராயணன் தலைமையில் நடைபெற்ற தி. மு. கழகப் பொதுக் கூட்டத்தில் தோழர் நாகூர் அனீபா இன்னிசைக்குப் பின்னர், தோழர்கள் எஸ். முத்து, சி. பி. சிற்றரசு ஆகியோர் சொற்பொழிவாற்றினர். புயலால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உணவு, உடை வசூலித்து அனுப்ப வேண்டுமென தீர்மானிக்கப்பட்டது.

**முறப்பநாடு தி. மு. கழகம்**

13—12—55 மாலை தோழர் சி. நடராசன் தலைமையில் நடைபெற்ற செயற்குழுக் கூட்டத்தில், புயலால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு அனுதாபம் தெரிவித்தும், புதிதாக உறுப்பினர்கள் சேர்க்கவும், பழைய உறுப்பினர்கள் புதுப்பித்துக் கொள்ளவும், விரைவில் பொதுக்கூட்டமொன்று நடத்துவதெனவும் தீர்மானிக்கப்பட்டது

தோழர்கள் சி. அரியமுத்து, ஆ சாமிநாதன் ஆகியோர் பேசினர்.

**காவாப்பட்டி தி.மு. கழகம்**

15—12—55ல், பாலக்கோடு அடுத்த காவாப்பட்டியில், தோழர் பி சி. மாணிக்கம் தலைமையில் தி. மு. கழகக் கிளை துவக்கப்பட்டது.

தோழர் கோ. பெருமாள் அண்ணா படத்தைத் திறந்துவைத்தார். தோழர் கோ. வையாபுரி கொடி ஏற்றினர்.

தோழர்கள் ப. கருப்புசுவாமி, பா. நா. பெருமாள் தி மு கழக வளர்ச்சி, கொள்கைகள் பற்றிப் பேசினர்.

**வங்கனூர் தி. மு. கழகம்**

13—12—55 மாலை 4 மணிக்கு, தோழர் கே நரசிம்மன் இல்லத்தில் செயலாளர் தலைமையில் நடைபெற்ற கழக உறுப்பினர் கூட்டத்தில், மதுரை மாநாட்டுக்கு ரூ. 20 நன்கொடை கொடுப்பது என்றும், இரண்டு மாத வரவு-செலவுகளை ஏற்றுக் கொண்டும், புயலால் பாதிக்கப்பட்டோருக்கு அனுதாபம் தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

**கூடலூர் தி. மு. கழகம்**

18—11—55ல் நீலகிரி மாவட்டத்திலுள்ள கூடலூர் தாலுகாவில் தி. மு கிளைக் கழகத் திறப்பு விழா, தோழர் ஆர். கே. ஜி. பதி தலைமையில் நடைபெற்றது.

தோழர்கள் எம். ஐ. எம். அனீப் செயலாளராகவும், அமிர்து அரசு துணைச் செயலாளராகவும், ஆர். கே. ஜி. பதி பொருளாளராகவும், அன்புச் செழியன், தென்னமுது, இராசேந்திரன், சின்னக்குட்டி, பிரான்சிஸ் ஆகியோர் நிர்வாக உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

**ஆ.தெக்கூர் தி. மு. கழகம்**

18—12—55 மாலை 6 மணிக்கு, இராமநாதபுரம் மாவட்டம் ஆ. தெக்கூரில், தோழர் பாஸ்கரன் கடையில் தோழர் பூ. வீரையா தலைமையில், தி. மு. கழக அமைப்புக் கூட்டம் நடைபெற்றது.

தோழர்கள் முத்து — செயலாளர்; நாகலிங்கம்—துணைச் செயலாளர்; கருப்பன் — பொருளாளர்; இப்ராகிம்—மாவட்டப் பிரதிநிதி; மற்றும் 7 பேர் கொண்ட செயற்குழு ஒன்று தேர்ந்தெடுக்கப்பட்டது.

புயலால் பாதிக்கப்பட்ட பகுதி மக்களுக்கு அனுதாபம் தெரிவித்துக் கொள்ளப்பட்டது.

பின்னர், 7-30 மணி யளவில் செயற்குழுக் கூட்டம் செயலாளர் முத்து தலைமையில் கூடி, தை மாதம் முதல் வாரத்தில் 'தமிழர் விழா' கொண்டாடுவதென்று முடிவு செய்யப்பட்டது.

**பெயர் சூட்டல்**

18—12—55 மாலை 4 மணிக்கு சுசிக்கமேத்த இருகோலை கிராமத்தில், சென்னை கோடம்பாக்கம் 85-வது வட்ட தி. மு. கழகத் தோழர் சா. வில்லவன் அவர்கள் ஆண் குழந்தைக்கு 'அழகிரி' என பெயர் சூட்டப்பட்டது. அதன் நினைவாக 'நம் நாடு' இதழுக்கு ரூ. 1 நன்கொடை தரப்பட்டது—வரப்பெற்றோம்— நன்றி-பொறுப்பாளர்.

# இந்தியாவை ஐந்து மண்டலங்களாக பிரிக்க வேண்டுமாம்!

## மத்திய சர்க்கார் ஆதிக்கம் தொடர்ந்து நீடிக்குமாம்!

### பண்டித நேருவின் 'திசை திருப்பும்' யோசனை

புதுடில்லி, டிச. 21—

வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு, மத்தியம் என ஐந்து மண்டலங்களாக இந்தியாவைப் பிரித்து, ஒவ்வொரு மண்டலத்திலும் இரண்டு மூன்று மாநிலங்களை இணைத்து, பொருளாதார அபிவிருத்திச் சிக்கல்களுக்குப் பரிகாரம் தேட ஆலோசனை சபைகள் அமைத்துக்கொண்டு, மத்திய சர்க்காருடன் இணைந்து இயங்கச் செய்யலாம் என்று, பிரதமர் என்ற முறையில் அல்லாது, தனது சொந்தக் கருத்து என்று கூறி, மக்கள் சபையில் ஜவகர்லால் நேரு யோசனை ஒன்றைத் தெரிவித்திருக்கிறாராம்.

இந்த யோசனையின்படி, இப்போது மத்திய சர்க்காரிடம் குவிந்துள்ள அதிகாரங்கள் எதுவும் குறைந்துவிடாது என்பதுடன், இதுபோன்ற யோசனைகள் ஏற்கனவே ஏ. இராமசாமி (முதலியார்), ஸ்டாபோர்டு கிரிப்ஸ் போன்றவர்களால் தெரிவிக்கப்பட்டதுதான் என்றும், ஆனால், ஏ. இராமசாமி (முதலியார்), கிரிப்ஸ் போன்றோரின் யோசனைப்படி, மத்திய சர்க்கார் இப்போது வைத்துக்கொண்டிருக்கிற அதிகாரங்களில் பெரும் பகுதியை இழந்துவிடவேண்டியிருக்கும் என்றும், பண்டித நேருவின் யோசனை, மொழிவழி மாநிலம் கோருவோரின் கவனத்தைத் திசை திருப்பவே மேற்கொள்ளப்பட்டது என்றும் டெல்லி அரசியல் வட்டாரங்கள் கருதுகின்றன.

மாநில புது அமைப்பு விவாதத்தின்போது மக்கள் சபையில் பேசிய நேரு, மேலும் கூறியதாவது:—

"ஐதராபாத்தைத் துண்டாடக் கூடாது என்பதே எனது விருப்பம்; ஆனால், இப்போது துண்டாடுவதற்குச் சம்மதித்திருக்கிறேன்.

"தெலிங்கானாவைப் பொறுத்தமட்டில் இன்னும் ஐந்தாண்டுகளுக்குச் சிக்கலை ஒத்திவைப்பதில் பலன் இல்லை. உடனடியாக அதனைத் தீர்த்தாக வேண்டும். 'விசால ஆந்திரம்' அமைந்தாக வேண்டும்.

"பம்பாய் பற்றியும், மராட்டியம் பற்றியும், இங்கு நடைபெற்ற இரு தரப்பு வாதங்களையும் கேட்ட பின்பு, எனக்கு, மராட்டியம், பம்பாய் குறித்து மாநிலக் குழு செய்துள்ள சிபாரிசுதான் சிறந்தது என்று தோன்றுகிறது.

'பஞ்சாபைப் பொறுத்து இந்துக்களும்—சீக்கியர்களும் இணைந்து நின்று வாழ்வதுதான் பஞ்சாப் செழிப்பதற்கான வழியாகும்; அதைத் தவிர வேறு வழியில்லை

'மக்கள் தங்கள் மொழி மூலமாகத்தான் வளரமுடியும் என்பதை நான் முழுவதுமாக ஒப்புக்கொள்கிறேன். ஆனால், ஒரு மொழி பேசுபவர்களுக்கும் மற்ற மொழி பேசுபவர்களுக்கு மிடையில் 'தடுப்புச் சுவர்' எழுப்ப வேண்டுமென்பதல்ல; ஒவ்வொரு மாநிலத்தையும் சுற்றி சுவர் எழுப்ப முடியுமா?

"தெளிவாகக் கூறவேண்டுமானால், இந்தியாவில் மொழி வழிப் பிரதேசங்கள் இருக்கத்தான் செய்கின்றன; அவற்றை நாம் ஒதுக்கிவிட முடியாது—ஒதுக்கவும் தேவை இல்லை.

"அந்தப் பிரதேசங்கள் எல்லாம் அனாதிகாலந்தொட்டு சரித்திர வளர்ச்சியின் பிரதிபலிப்பாயிருக்கின்றன; ஆனால், அந்தப் பிரதேசங்கள் மற்றவருக்கு எதிர்ப்பானவை என்று கருதி, இரண்டு பிரதேசங்களுக்கிடையே ஒரு கோடு கிழிப்பது, முக்கியத்துவத்தை மிகைப்படுத்துவதாகும்.

'மொழிவழி அடிப்படையிலேயே அந்தக் கோட்டைக் கிழிக்க வேண்டும் என்று கருதுவீர்களேயானால், சிலரது—ஏன் பலராகக்கூட இருக்கலாம்—விருப்பத்திற்கு எதிராக நீங்கள் நடப்பதாகப் பொருள்படும். ஆனால், ஏற்கனவே தவிர்க்க முடியாதபடி இரு மொழிப் பிரதேசங்கள் வேறு இருக்கின்றன.

"இன்று, இரு மொழிப் பிரதேசங்களாக இல்லாதவற்றிலுங்கூட ஒரு மொழிப் பகுதியிலிருந்து மறுமொழிப் பகுதிக்குச் செல்லும் மக்களை நீங்கள் தடுக்கப்போகிறீர்களா? ஒரு பகுதியிலிருந்து மறுபகுதிக்கு—ஏன்—எந்தப் பகுதிக்கு வேண்டுமானாலும் செல்லலாம் என்ற அரசியல் சட்டத்தின் கொள்கைக்கு முரணாக நடக்க முடியுமா? நிச்சயம் முடியாது. எனவே, என்னதான் நிர்ணயமான கோடு ஒன்றை நீங்கள் கிழித்தாலும், ஒரு பகுதியிலிருப்பவர்கள் மற்ற பகுதிக்கு வரத்தான் செய்வார்கள்.

"இப்படி ஒருபகுதியிலிருந்து மறுபகுதிக்கு வரவும் - போகவுமாக மக்கள் இருப்பதால், ஒரு குறிப்பிட்ட மொழிப் பகுதியின் தன்மையில், நிச்சயம் மாற்றங்கள் ஏற்படத்தான் செய்யும். பத்து ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு குறிப்பிட்ட தாலுக்காவின் மக்கள் தொகை மொழிவழிப்படி மாறிவிட்டது என்பதால், அந்தத் தாலுகா, அந்த மாநிலத்திலிருந்து பிரிக்கப்பட வேண்டும் என்று கூற முடியுமா?

'எனவே, இவற்றைக் குறித்தெல்லாம் நாம் நமது கவனத்தைச் செலுத்தியாக வேண்டும்."

## பெங்களூரில்

துணைப் பொதுச்செயலாளர்

### என். வி. நடராசன்

25—12—55 ஞாயிறு காலை 7 மணிக்கு: கண்டோன்மெண்ட் இரயில் நிலையத்தில் வரவேற்பு.

காலை 9 மணிக்கு: கண்டோன்மெண்ட் பாரத் பவனில் கழக உறுப்பினர்கள் கூட்டம்.

மாலை 5½ மணிக்கு: பிளாக்பள்ளி கழகக் கட்டிட எதிரில் பொதுக்கூட்டம்.

### திருக்குறள் வகுப்பு

24—12—55 பிற்பகல் 2-30 மணிக்கு, சென்னை-பெத்துநாய்க்கன்பேட்டை, எண் 15, முத்துக்கிருஷ்ணன் தெருவில், தாய்மார் கழகச் சார்பில் திருக்குறள் வகுப்பு நடைபெறும். 'சுற்றந் தழால்' என்பது குறித்து, திரு. மயிலை சிவமுத்து சொற்பொழிவாற்றுவார்.

## இரயில்வேத் துறையில் ஊழல்களுக்குமேல்...

[1-ம் பக்கத்தின் தொடர்ச்சி]

"அதுபோன்றே, சித்தரஞ்சன் புகைவண்டித் தொழிற்சாலையினுல், மற்றொரு பிரிட்டிஷ் நிறுவனத்திடமிருந்து நேரடியாக 269 'சிலிண்டர்'கள் தருவிக்கப்பட்டன; அவைகளில் 90 'சிலிண்டர்'கள் உடைப்பு கண்டுவிட்டன.

"இரயில்வேத் துறையில், ஒவ்வொரு பிரிவுகளுக்கும் தேவைப்படும் பொருட்களின் விலையை ஏட்டில் பதிவதும்கூட, தவறான முறையில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது; அதாவது, அந்தப் பொருட்களை மொத்தமாகச் சேமித்து வைக்கப்பட்டுள்ள கிடங்கிலிருந்து, தேவைப்படும் பொருட்கள் குறிப்பிட்ட பிரிவுகளுக்குப் போய்ச் சேருவதற்குள்ளாகவே அப்பொருட்களின் மதிப்புத் தொகைகள், அவ்வப்பிரிவுகளின் கணக்கு ஏடுகளில் வரவு வைக்கப்பட்டுவிடுகின்றன.

"குறிப்பிட்ட ஒரு விவகாரத்தில், 4·52 இலட்ச ரூபாய் மதிப்புக்குப் பொருட்கள் கிடைத்ததாக கணக்கில் எழுதப்பட்டிருக்கிறது. ஆனால், அத்தொகைக்குரிய பொருட்கள், அவ்வாண்டிற்குள் போய்ச் சேரவில்லை. கணக்கெழுதப்பட்டுள்ள ஆண்டு முழுதும் குறிப்பிட்ட இடத்திற்குப் போய்ச் சேராதென்பதும், அப்படி சேர்ப்பிப்பதற்கான வாகன் வசதிகள் கிடைக்காது என்பதும், இரயில்வேத் துறையினருக்கு மிகமிகத் தெளிவாகத் தெரிந்திருந்தும் கூட, அப்பொருட்களின் மதிப்புத் தொகையை கணக்கில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது."

1953—54-ம் ஆண்டு கணக்கைத் தணிக்கைச் செய்த இரயில்வே தணிக்கை அறிக்கை, மேற்படி தகவலைக் கொடுத்திருக்கிறது.

## 17 அடி நீளம் 10 அடி சுற்றளவு கொண்ட 'வேளா மீன்'

### வலையில் சிக்கிக்கொண்ட விந்தை!

சென்னை, டிச. 22—

நேற்று காலை இராயபுரம், பனைமரத்தொட்டி கடற்கரையில் சுமார் 7-30 மணியளவில் திரு. கே. மதுரை செட்டியார் வலையில் பிடித்து வந்த 'வேளா மீன்' (சுமார் நீளம் 17 அடி; சுற்றளவு 10 அடி) ரூ. 120-க்கு விற்பனை செய்யப்பட்டுள்ளது.

இது, சுறா—திமிங்கலம் போன்ற இராட்சச இனத்தைச் சேர்ந்தவை.

'வேளா மீன்' சாதாரணமாக வலையில் கிடைப்பது கிடையாது; தப்பித்தவறி பிடித்தாலும் உயிர்ச்சேதம் இல்லாமலிருப்பது துர்லபந்தான். மீன் இலாகா அதற்கெனப் பிரத்தியேகமாகச் செய்துள்ள 'தூண்டில்' இணைத்த சங்கிலியினுல்தான் அம்மீனைப் பிடிப்பது வழக்கம். வழக்கத்திற்கு மாறாக வலையில் பிடித்த நிகழ்ச்சி வியக்கத்தக்கதே! வலைச் சேதம், (பொருட் சேதம்) இருந்தாலும், உயிர்ச் சேதம் இல்லாமல் அந்த 'வேளா மீனை'ப் பிடித்து வந்தது போற்றுதற்குரிய நிகழ்ச்சியாகும்!

## 'தினமணி'யின் புளுகு!

கே. வி. கே. சாமி அறிவிப்பு

"11—12—55 'தினமணி' காலைப் பதிப்பில் என்னைப் பற்றிய தவறான செய்தி ஒன்று வெளியிடப்பட்டிருக்கிறது.

"தூத்துக்குடி கம்யூனிஸ்டு நகரசபை உறுப்பினர்களும், மற்றும் சிலரும் சேர்ந்து, குரூஸ்புரம் என்ற இடத்தில் என்னைத் தாக்கி அடித்துவிட்டதாகவும், அதனால் நான் மருத்துவ மனையில் சிகிச்சை பெற்று வருவதாகவும் செய்தி வந்திருக்கிறது.

"இது முழுப் பொய்; வேண்டுமென்றே செய்யப்பட்ட சூழ்ச்சியுமாகும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

## கருணாநிதி முழக்கம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

சர்க்காரும், காங்கிரசும், இப்போது நிவாரண வேலையில் ஈடுபடும் இவர்களும், ஏதும் செய்யவில்லையே—ஏன்?

"சென்ற முறை, இப்போது போன்று சுமார் ஆயிரம் பேர்வரை உயிர்ச்சேதம் ஏற்படாதிருந்திருக்கலாம்; ஆனால், இதே அளவு பொருட்சேதம் ஏற்படத்தான் செய்தது.

"கனி குலுங்கும் சோலைகள், மலர் குலுங்கும் தோட்டங்கள் தென்னந்தோப்புகள் எல்லாம் அழிந்துவிட்டன; வீடுகள் சரிந்தன; குடிசைகள் மறைந்தன; சாலைகள் பழுதுபட்டன; வளமான வயல்கள் பாதிக்கப்பட்டன—இப்போதுபோல் அப்போதும்! என்றாலும், இன்று ஓடி ஓடிப் பணிபுரிவதாகக் கூறிக்கொள்வோர் ஏன் ஏதும் செய்யாது அப்போது வாளாவிருந்தனர்? காரணமெல்லாம், அப்போது புயல் பொதுத் தேர்தல்கள் நடைபெற்ற பிறகு வந்தது; இப்போது நல்ல வேளையாக, பொதுத் தேர்தலுக்கு முன்பு புயலும்—வெள்ளமும் வந்தன சேதமடைந்தோருக்கு வாழ்வுதர சர்க்காரும், இதரரும் முன் வருகிறார்கள். எப்படியோ, நமக்கு மகிழ்வுதான்—பலரும், துயர்துடைக்கப்பாடுபடுவது; ஏனெனில், பாதிக்கப்பட்டிருப்பவர்கள், கண்ணீர் வடிப்பவர்கள் நம் மக்கள்—நம் இனத்தவர் என்பதால்! யார் உதவி செய்தாலும் நாம் அவர்களைப் பாராட்டவே செய்வோம்; ஏனெனில் உதவி பெறுவோர் நம்மவர்!

"போன முறை முப்பதாயிரம் ரூபாய் நிதி திரட்டித் தந்தவர்கள், இப்போது ஏன், ஏதும் செய்யகாணோம்—என்று ஒரு வார இதழ் கேலியும், கிண்டலும் பேசியிருக்கிறது இந்த முறையும் நாம் ஏதும் செய்யாமலில்லை; ஆனதை எல்லாம் செய்து கொண்டுதான் இருக்கிறோம் நம் தோழர்கள் ஆங்காங்கே நிதியும், துணியும், அரிசியும், இதர பண்டங்களும் திரட்டித் தந்தவண்ணமுள்ளனர்.

'இங்கு பேசிய மாவட்டச் செயலாளர், இதுவரை ரூ. 1,580-ம், பதினாயிரத்திற்கு மேற்பட்ட துணிகளும், ஏராளமான அரிசியும் சென்னை நகரில் மட்டும் இந்தப் பதினைந்து நாளில் வசூலாகி இருப்பதாக அறிவித்தார். இது போல இன்னும் பல மாவட்டத் தோழர்களும் நிவாரண வேலையில் ஈடுபட்டவண்ணமுள்ளனர்.

"இரண்டு தினங்களுக்கு முன்பு திருச்சியில் சிறப்புக் கூட்டம் ஒன்று நடத்தினார்கள்; நானும் கலந்து கொண்டேன்; கூட்டத்தில மிச்சப்பட்ட ரூ. 500-க்கும் கைத்தறி ஆடைகள் வாங்கிகொண்டு தஞ்சை மாவட்டத்தில் பாதிக்கப்பட்ட பகுதி மக்களுக்கு நானே நேரில் சென்று துணிகளைத் தந்து வந்தேன். தலைமைநிலைய சார்பில் பொதுச்செயலாளர், பாதிக்கப்பட்ட பகுதிகளைப் பார்வையிட்டு வந்திருக்கிறார் மேலும் ஆயிரம் ரூபாய்வரை சர்க்காரிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. இப்படி நாங்கள் இப்போதும் எங்களாலான வகையில் நிவாரணம் தேடித்தர முயன்று கொண்டுதான் இருக்கிறோம்."

தொடர்ந்து பேசிய கருணாநிதி அவர்கள், தொழிலாளர்கள் தி. மு. கழகத்தை நோக்கி இன்று தங்கள் கரத்தை உயர்த்தியிருப்பது கண்டு, பொறாத சிலர் கூறும் பழி குறித்தும், அந்தப் பொறாமைக்காரர்களுக்கு கழகத்தின் நிலையை தெளிவாக விளக்கியும் கருத்துரை தந்தார்.

## பாதிக்கப்பட்ட பகுதிகளுக்கு வரி வஜா!

சென்னை, டிச. 21—

புயல் வெள்ளத்தால் சேதாரமுற்ற மாவட்டங்களில், 4 அணா மதிப்புள்ள பயிர்களுக்கு முழு நிலவரி வஜாவும், 8 அணா மதிப்புக்கு குறைவாகவும், 4 அணா மதிப்புக்கு அதிகமாகவும் விளைந்துள்ள நிலங்களுக்கு பாதி கிஸ்தி வஜாவும் செய்ய சென்னை சர்க்கார் முடிவு செய்திருக்கிறதாம்.

## பஞ்சாப் முதன் மந்திரி அன்பளிப்பு

### தமிழ் நாட்டு நிவாரணத்திற்கு ரூ. 10,000

சந்திகார், டிச. 21—

சென்னையில் புயலால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரணமளிப்பதற்கென முதன் மந்திரி நிதியிலிருந்து பஞ்சாப் முதன் மந்திரி பீமசேன சச்சார், சென்னை முதன் மந்திரி காமராசருக்கு ரூ. 10,000 அன்பளிப்புத் தந்திருப்பதாக அதிகாரபூர்வமாக அறிவிக்கப்பட்டது.

## இந்தியாவிற்கு

### அமெரிக்கத் தலைவர் உதவி

புதுடில்லி, டிச 21—

அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஐசனோவர் கிழக்குப் பிரதேச அபிவிருத்திக்கு என்று ஒதுக்கியுள்ள 10 கோடி டாலர் விசேட நிதியிலிருந்து இந்தியாவிற்கு சுமார் இரண்டரை கோடி டாலர்வரை கிடைக்கக்கூடும் என்று கூறப்படுகிறது.

## திரு-தமிழக மலைச்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

நாகர்கோவில் வட்டாரத்திற்கு, பல லாரிகள் மூலம் வெட்டப்பட்ட ரப்பர் மரங்களும், தேக்கு மரங்களும் விற்பனைக்காகக் கொண்டு வரப்படுவதாகத் தெரிகிறது

பல விறகுக் கடைகளில் ரப்பர் மர விறகுகள் விற்பனைக்காக வைக்கப்பட்டிருக்கின்றன இதன் காரணமாக அரசியல் பிரமுகர்களிடையே பரபரப்பு உருவாகி வருகிறது

சர்க்காருக்குச் சொந்தமான ரிசர்வ் காடுகளிலுள்ள ரப்பர் மரங்களும், தேக்கு மரங்களுமே நூற்றுக்கணக்கில் வெட்டப்பட்டு வருகின்றதாம்.

இவ்வாறு அந்த மலைச் செல்வங்கள் வெட்டி அழிக்கப்படுவதற்கான காரணம் என்னவென்று தெரியவில்லை

திரு—கொச்சி சர்க்கார், இந்த விஷயத்தில் மௌனமாக இருந்து வருவதாக கூறப்படுகிறது.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24 சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ.

